பைவிரி யல்கு லாட்கும்
படுகடல் நிதியின் வைகும்
மைவரை மார்பி னற்கு
மனமுறத் தேற்றி யிட்டான்.

(இ - ள்.) கைவரை அன்றி நில்லாக் கடுஞ்சின மடங்கல் அன்னான் - ஒழுக்கத்தின் எல்லை கடவாத, கொடிய சீற்றமுடைய சிங்கம் போன்றவன்; தெவ்வரைச் செகுக்கும் நீதி மனத்தகத்து எழுதி - தன் பகைவரை அழிக்கும் முறைமையை அவன் மனத்திலே கொள்ளுமாறு உருவாக்கி; செம்பொன் பைவிரி அல்குலாட்கும் படுகடல் நிதியின் வைகும் மைவரை மார்பினற்கும் - மேகலை அணிந்த அல்குலையுடைய சுநந்தைக்கும் கடல்போற் கிடக்கும் செல்வத்திலே தங்கிய, முகில் தங்கிய மலையனைய மார்பினன் கந்துகனுக்கும்; மனம் உறத் தேற்றி யிட்டான் - உள்ளத்திற் பொருந்துமாறு (தன் துறவைத்) தெளிவித்திட்டான். (௩௭௮)

௪௦௮. அழலுறு வெண்ணெய் போல
வகங்குழைந் துருகி யாற்றாள்
குழலுறு கிளவி சோர்ந்து
குமரனைத் தமிய னாக
நிழலுறு மதிய மன்னாய்
நீத்தியோ வெனவு நில்லான்
பழவினை பரிய நோற்பான்
விஞ்சையர் வேந்தன் சென்றான்.

(இ - ள்.) குழல் உறு கிளவி அழல் உறு வெண்ணெய் போல அகம் குழைந்து உருகி ஆற்றாள் சோர்ந்து - குழலனைய இனிய மொழியாள் (அவன் மொழி கேட்டு) தீயிற்பட்ட வெண்ணெய் போல உள்ளம் குழைவுற்று உருகிப் பொறாதவளாய்ச் சோர்வுற்று; நிழல் உறும் மதியம் அன்னாய் - ஒளி விடுந் திங்களைப் போன்றவனே!; குமரனைத் தமியன் ஆக நீத்தியோ எனவும் - சிறுவனைத் தனியனாம்படி துறந்தனையோ என்று வேண்டவும்; விஞ்சையர் வேந்தன் நில்லான் பழவினை பரிய நோற்பான் சென்றான் - விஞ்சையர் மன்னன் நில்லாதவனாகிப் பழைய வினை தீருமாறு தவஞ் செய்வதற்குச் சென்றான். (௩௭௯)

நாமகள் இலம்பகம் முற்றிற்று.

ஆகச் செய்யுட்கள் - ௪௦௮

